Registered No. M. 2330.



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

"ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானதரு வாணியை உள்நாடு"

மலர் ௬ | ஸ்ரீமுக ஆண்டு கார்த்திகைத் திங்கள் 1933 ஹு நவம்பர்மீ | இதழ் ௧௧

## திருமூலர் வரலாறு*

[பத்திராசிரியர்]

குடிமன்னு சாத்தனூர்க் கோக்குல மேய்ப்போன் குரம்பைபுக்கு
முடிமன்னு கூனற் பிறையாளன் தன்னை முழுத்தமிழின்
படிமன்னு வேதத்தின் சொற்படி யேபர விட்டென்உச்சி
அடிமன்ன வைத்தபி ரான்மூல னாகின்ற அங்கணனே.

—நம்பியாண்டார் நம்பிகள்.

கயிலாயத் தொருசித்தர் பொதியிற் சேர்வார்
காவிரிசூழ் சாத்தனூர் கருதூ மூலன்
பயிலாநோ யுடன்வீயத் துயா நீடும்
பசுக்களைக்கண் டவனுடலிற் பாய்ந்து போத
அயலாகப் பண்டையுடல் அருளான் மேவி
ஆவடுதண் டுறையாண்டுக் கொருபா வாகக்
குயிலாரு மாசடியி விருந்து கூறிக்
கோதிலா வடகயிலை குறுகி னாரே.

—உமாபதிசிவாசாரியார்.

திருக்கயிலாயமலைக் கோயிலுக்கு முதற் பெருநாயகமாகி இந்திரன் மாலயன் முதலாம் இமையவர்க்கு நெறியருளும் நந்தியெம்பெருமான் திருவருள் பெற்ற நான் மறையோகிகள் ஒருவர் (அணிமா முதலான அட்டமாசித்தியும் பெற்றவர்) அகத்திய முனிவரைக்கண்டு அவருடன் சிலநாள் வசிப்பதற்காகக் கயிலைமலையிலிருந்து பொதிய

* இக்கட்டுரையில் வந்துள்ள பாட்டெண், பக்க எண்கள் சமாஜத்தின் புதிய பதிப்பாகிய திருமந்திரத்திலுள்ளவை,

மலை நோக்கிப் புறப்பட்டார். வழியிலே திருக்கேதாரம், பசுபதிநேபாளம், அவிமுத்தம் (=காசி), திருப்பருப்பதம், காளத்தி, ஆலங்காடு, ஏகம்பம் என்ற தலங்களில் இறைவனை வணங்கினர். காஞ்சியில் சில யோகியரைக் கண்டு நயந்து, திருவதிகை சென்று, பின்னர் தில்லையில் திருநடனங் கண்டு அங்குச் சிலநாள் தங்கிக் காவிரியைக் கடந்து, திருவாவடுதுறை சென்று தொழுதார். தொழுது மீளும்போது அவ்விடம் விட்டு "அகலாததொரு கருத்து முன்னி யெழுங் குறிப்பினல் மூளுமாதரவெய்தப் பின்னுமகன்று" சென்றார். செல்லும்வழியில் காவிரிக்கரையில் பசுக்கூட்டங்கள் அழுவதைக்கண்டார்.

அந்தணர் வாழ்கின்ற சாத்தனூரில் பசுமேய்ப்பார் குடியில் தோன்றிய மூலன் என்பான் வழக்கம்போல் ஒருநாள் பசுக்களை மேய்க்கும்போது, தனது வாழ்நாள் முடிவெய்த, நிலத்தில் வீழ்ந்திறந்தான். அவன் மேய்த்த பசுக்கள் அவன் உடம்பைச் சுற்றிச்சுற்றிக் கதறி யழுதன. அவ்வழுகையைக்கண்ட சிவயோகியார் திருவருளாலே அப்பசுக்களின் துயரை நீக்கத் துணிந்து, தமது உடம்புக்குத் தகுந்த அரண்செய்து, கூடுவிட்டுக் கூடுபாயும் சித்தியால் மூலன் உடம்பில் தமதுயிரைப் பாய்த்தினர். "பாய்த்தியபின் **திருமூலராய் எழலும்** பசுக்களெலாம், நாத்தழும்ப நக்கிமோந்து அணைந்து கனைப்பொடு நயந்து, வாய்த்தெழுந்த களிப்பினல் வாலெடுத்துத் துள்ளி" மேய்ந்தன. மாலைப்பொழுது வந்தவுடன் தத்தம் கன்றுகளை நினைந்து சாத்தனூருக்குத் திரும்பி, அவ்வவற்றின் வீடுகளுட் புகுந்தன. திருமூலர் எவ்வீட்டிலும் நுழையாமல் வெளியே நின்றார்.

இவ்வாறு இவர் நிற்பதைக்கண்ட மூலன் மனைவி திருமூலரைத் தனது கணவனென்றே எண்ணித் தொட்டழைக்க வந்தாள். ஆனல் திருமூலர் அதற்கிசையாது "இங்கு உனக்கு என்னுடன் அணைவொன் றில்லையென எதிர்மறுத்து" ஒருபொது மடத்தினுட் புகுந்து சிவயோகத்தி லமர்ந்திருந்தார்.

அன்றிரவெல்லாம் தூங்காது வருந்திய மூலன் மனைவி மறுநாட் காலை நல்லார் பலரிடத்து முறையிட்டாள். அவர்கள் திருமூலர் நிட்டையிலிருப்பதைக் கண்டு, "பித்துற்ற மயலன்று, பிறிதொரு சார்புளதன்று, சித்தவிகற்பம் களைந்து தெளிந்த சிவயோகமே" அவர் இருக்கும் நிலையெனத் தெரிந்து அவர் இல்வாழ்க்கைக்கு உதவார் என்பதை மூலன் மனைவிக்குத் தெரிவித்தார்கள். அவள் துயரெய்திமையலுற உடனிருந்தவர்கள் அவளைக் கொண்டகன்றார்கள்.

திருமூலர் பின்னர் நிட்டைவிட்டெழுந்து பசுக்கள்வந்த வழியே மீண்டுத்தாம் அரண் செய்து வைத்த தமதுடலைக் காணது, மெய்ஞ்ஞானத்தால் ஆராய்ந்து, சிவபெருமான் தந்த, ஆகமப்பொருளை மண்ணின்மிசைத் தமது வாக்கினல் தமிழ்வகுப்ப இறைவன் திருவுளங்கொண்டு தமதுடலைக் கரப்பித்தார் எனத்தெளிந்தனர். மூலனுடைய சுற்றத்தார் மீண்டும் தொடர அவர்களுக்குத் தமது தொடர் பின்மையை நன்றாய் விளக்கிப் பிறகு திருவாவடுதுறை சென்றார்.

ஆங்கு இறைவனை வணங்கி மேற்குப் புறத்தில் மிகவுயர்ந்த ஓர் அரசமரத்தின்கீழ் அமர்ந்து சிவயோகம் புரிந்து மூவாயிரம் ஆண்டு இப்புவியிலிருந்து "ஒன்றவன்றானென"த் தொடங்கி ஓராண்டுக் கொன்றாக மூவாயிரம் திருமந்திரமோதி மீண்டும் திருக்கயிலை சென்று "ஒருகாலும் பிரியாமைத்தாள் அடைந்தார்"

"ஊனுடம்பிற் பிறவிவிடந் தீர்ந்துலகத் தோருய்ய
ஞானமுதல் நான்குமலர் நல்திருமந் திரமாலை
பான்மைமுறை ஓராண்டுக் கொன்றாகப் பரம்பொருளாம்
ஏனஎயி றணிந்தாரை ஒன்றவன்றா னெனஎடுத்து"

"முன்னியஅப் பொருள்மாலைத் தமிழ்மூவா யிரஞ்சாத்தி
மன்னியமூ வாயிரத்தாண் டிப்புவிமேல் மகிழ்ந்திருந்து

செந்நிமதி யணிந்தார்தம் திருவருளாற் றிருக்கயிலை
தன்னிலணைந் தொருகாலும் பிரியாமைத் தாளடைந்தார்"

இவ்வாலாறு சேக்கிழார் பெருமான் திருவாக்கால் திருத்தொண்டர் புராணத்துள் இருபத்தெட்டு இனிய பாக்களாற் கூறப்பட்டுள்ளது. இவ்வரலாற்றுக் காதரவான குறிப்புக்களும் இவ்வரலாற்றிற் காணப்பெறாத செய்திகளை யறிவிக்கும் குறிப்புக்களும் திருமந்திரத்தில் காணப்படுகின்றன. இக்குறிப்புக்களைத் திரட்டுங்கால், பாயிரமுட்பட திருமந்திரம் முழுமையும் திருமூலர் வாக்கென்றே எண்ணிக் கொள்ளவேண்டும். திருமூலர் வாக்கல்ல வென்று ஐயுறக்கூடிய பாடல்கள் பின்னர் விவரிக்கப்படும்.

திராவிடமாபாடிய ஆசிரியர் சிவஞான சுவாமிகள் காலத்திலிருந்த சாஸ்திரஞ் சுவாமிநாதத் தம்பிரான் சுவாமிகளாற் பாடப்பெற்றதும் திருவாவடுதுறை ஆதீனத்து கஉ-வது பட்டமாகிய திருச்சிற்றம்பல தேசிகசுவாமிகள் காலத்து (ஏறக்குறைய நூற்றைம்பது ஆண்டுகட்குமுன்) அரங்கேறியதும் இரண்டாயிரத்துக்கு மேற்பட்ட செய்யுட்களையுடையதும் இதுவரை அச்சில் வெளிவராததுமாகிய திருவாவடுதுறைப் புராணத்தில் "திருமூலரைத் தடுத்தாட் கொண்ட சருக்கம்" ஒன்றுளது. அதிற்கீழே காணும் மாறுபாடுகளோடு பெரியபுராண வரலாற்றை யொட்டியே திருமூலர் சரிதை கூறப்படுகின்றது. மூலன் உடலிற் புகவேண்டுமென்ற பவவினை திருமூலருக்குண்மையின் அவர் அவ்வாறு புகநேர்ந்ததென்றும் திருமூலர் அரண்செய்து வைத்த தமது சொந்த வுடலைப் போதியின்கீழ் மறையப் பொதிந்து இறைவனே வைத்ததாகவும் இப்புராணம் கூறுவதோடு திருமந்திரம் வெளிப்பட்ட விதத்தையும் கீழ்வரும் செய்யுளால் தெரிவிக்கின்றது.

"அறிவான் மிகுந்த சித்தர்குழாம் அலேகத்தெழுதி யவரவரே
நெறியாலுணர்ந்து களித்துலக முழுதமுணர நிரப்பினர்கள்
பிறியாச் சிவபோகம் புசிக்கு மூலரின்றும் பிரானடியிற்
செறிவாமி யோகுற்றிருந்தனர் நீடூழி பலவும் சென்றனவால்"

"ஒன்றவன்" "நந்தியருள் பெற்ற" முதலிய முப்பது பாடல்களின் கருத்தமைதிகள் இப்புராணத்திற் கூறப்பட்டுள்ளன.

**பெரிய புராண வரலாற்றுக் காதரவான அகச்சான்றுகள் :—**(1) திருமூலர் தாம் நந்தியருள் பெற்றவரென்று 67, 68, 73-ம் பாக்களிற் கூறுகிறுர் (2) தாம் கயிலை வழி வந்ததாக 91-ம் பாட்டிலும் வான்வழியூடு வந்ததாக 83-ம் பாட்டிலும் கூறுகிறுர். (3) தாம் திருவாவடுதுறையிலிருந்ததாக 78, 79-ம் பாக்களில் கூறுகிறுர். (4) தாம் போதியின் கீழிருந்ததை 79, 82-ம் பாக்களிற் கூறுகிறுர். இவற்றுள் 79-வது பாட்டு திருவாவடுதுறையின் போதியின் நீழலிலிருந்ததைத் தெளிவாகக் கூறுகிறது. 82-வது பாட்டில் நந்திகர்புக்கு ஒன்பது கோடி யுகந்தனுள் போதியின் கீழிருந்தமை கூறப்பட்டது. (5) தம்மைத் தமிழ் செய்யுமாறு இறைவன் நன்ருகப் படைத்ததாக 81-ம் பாட்டிற் கூறுகிறுர் (6) தாம் ஆகமம் கூறுவதாக 73, 74-ம் பாடல்களிற் கூறுகிறுர் (7) இறைவன் திருக்கூத்தின் சீலாங்க வேதத்தைச் செப்புவதே தாம் வந்த காரணமென்று 77-ம் பாட்டிற் கூறுகிறுர். (8) திருமூலர் கூறுவது மந்திரம், மந்திரமாலை யென 85, 86-ம் பாடல்கள் குறிக்கின்றன. (9) திருமூலர் அருளிச்செய்த பாடல்கள் மூவாயிரம் என்று 99, 100, 101, 3046-ம் பாடல்கள் கூறுகின்றன. (10) திருமூலர் நெடுநாள் உயிரோடிருந்தமை 74, 80, 82-ம் பாடல்களாற்றுலங்கும். இம்மட்டில் பெரிய புராண வரலாற்றுக்கு ஆதாரவுகளாகத் திருமந்திர அகச்சான்றுகள் கிடைக்கின்றன.

**பெரிய புராணத்திற் காணுத வரலாற்றுக் குறிப்புகட்குத் திருமந்திர அகச்சான்றுகள் :—**(1) நந்தியருள் பெற்றவர்கள் தம்மோடெண்மர் இன்னரின்னரென்றும், அவர்கள் நாதர்கள் என்றும் திருமூலர் 67, 68-ம் பாக்களிற் கூறுகிறுர் (2) மந்திரம்

பெற்ற வழிமுறையில் மாலாங்கன் முதலிய எழுவர் தமதுவழி (=சிஷ்ய பரம்பரை) யென்று 69-ம் பாட்டிற் கூறுகிறார். (3) திருமூலரை யுள்ளிட்ட எழுவர் எழு மடங் களைத் தாபித்தமை 101, 102-ம் பாடல்களிற் கூறப்பட்டுள்ளது. (4) எழுகோடி யுகம், ஒன்பது கோடி யுகம், எண்ணிலி கோடியெனப் பலபடத் தமது வாணாளைத் திருமூலர் 74, 82, 80-ம் பாடல்களிற் குறிக்கிறார். (5) மூவாயிரம் பாடல் கொண்ட திருமந்திரம் ஒன்பது தந்திரப் பகுப்புடையதாக 101-ம் பாடல் கூறுகின்றது (6) "பூர்வத்து மூவா யிரம் பொது" என்று 100-ம் பாட்டிலுள்ள குறிப்பிலிருந்து பிற்காலத்தில் மொத்த பாடற்றொகை மாறுபட்டதை நன்கு யறியலாம்.

**திருமூலர் காலத்தைப்பற்றிய குறிப்புகள் :—**(1) மன்று தொழுத பதஞ்சலியும் தம்மோடு நந்தியருள் பெற்றவருள் ஒருவர் என்று67-ம் பாட்டில் திருமூலர் கூறு கிறார். மகாபாஷ்யம் இயற்றிய பதஞ்சலி வேறு, யோக சூத்திரம் இயற்றிய பதஞ்சலி வேறு என சம்ஸ்கிருத நூல் வரலாற்றாசிரியர் டாக்டர் கீத் (Dr. A. B Keith) என் பவர் கருதுகிறார். முற்கூறிய பதஞ்சலியார் கி. மு. 150-ல் இருந்தவரென்றும் பிற் கூறியவர் கி. பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்த மாகன் என்ற கவிக்கு முந்தியவரென் றும் அவ்வாசிரியர் கூறுகிறார். முற்கூறிய பதஞ்சலியே திருமூலருடன் நந்தியருள் பெற்ற நாதருள் ஒருவர் எனக் கொண்டாலும் திருமூலர் கி. மு. 150-ம் ஆண்டுக்கு முற்பட்டவரென்று கொள்ள இயலாது (2) ஆறு சமயங்கள் 1530, 1533, 1537, 1557, 1561-ம் பாக்களிற் கூறப்பட்டுள்ளன. இவற்றுள் முதன் மூன்று பாக்களிற் புறச்சம யங்களும் பின்னிரண்டில் உட்சமயங்களும் கூறப்பட்டனவாக அதிகாரப் பகுப்பி லிருந்து அறியக்கிடக்கின்றது. எனவே திருமூலர் ஆறு சமயப்பகுப்பு ஏற்பட்ட பிறகு இருந்தனராதல் வேண்டும் (3) முத்தமிழ் வேதம்76-ம் பாட்டிலும், தமிழ் சாத்திரம் பொங்கி மிகாமை 87-ம் பாட்டிலும், தமிழ் மண்டலமைந்து 1646-ம் பாட்டிலும் கூறப் பட்டுள்ளன. முத்தமிழ் வேதம் தேவாரத்தைக் குறிப்பதாயின் திருமூலர் தேவார காலத்துக்குப் பிந்தியவராதல் வேண்டும். ஆனால் திருமூலர் சுந்தரமூர்த்தி சுவாமிக ளால் திருத்தொண்டத் தொகையில் கூறப்படுகிறார். முத்தமிழ் வேதம் வேறு தமிழ் வேதங்களென்று கொண்டால் திருமூலர் அவ்வேதங்கட்குப் பிற்பட்டாராதல் வேண் டும். தமிழ் மண்டலமைந்து சேர, சோழ, பாண்டி, கொங்கு, தொண்டை மண்டலங் களைக் குறித்துளதாகக் கொள்ளின் இவ்வைந்தும் மண்டலங்களான பிறகு திருமூலர் உளராதல் வேண்டும். சென்னைப் பல்கலைக் கழகத்து ஆசிரியன்மார் ஆராய்ச்சியில் கி. பி. மூன்றாம் நூற்றாண்டுக்கு முன்னர் இம் மண்டலங்கள் ஐந்தும் சிறப்பாக விளங்கின வாகத் தெரியவில்லை. திருமூலர் காலம் தமிழ் சாத்திரம் பொங்கி மிகாதகாலம் என்பதும் நோக்கத்தக்கது (4) அகத்தியர் தென்னாடு போந்த வரலாறு 337, 338-ம் பாக்களிலும் சண்டேசர் வரலாறு 351-ம் பாட்டிலும் கூறப்பட்டுள்ளன. கண்ணப்பர் வரலாறும் வேறு நாயன்மார் வரலாறும் யாண்டும் கூறப்படவில்லை. (5) அட்டவீரட்டங்கள் 339—346-ம் பாக்களிற் கூறப்படுங்கால் காலனைக் காய்ந்ததும் காமனை யழித்ததும் கடவூரிலும் கொறுக்கையிலும் என்று தலங்களைக் குறித்தும் ஏனைய வீரட்டங்கள் தலங்கள் குறிக் கப் பெறுமலும் கூறப்பட்டுள்ளன. திருஞானசம்பந்தர் தேவாரத்தில் (கொறுக்கை, வழுவூர் நீங்கலாக) வீரட்டத் தலங்கள் ஆறு பாடல்பெற்றுள்ளன. வழுவூர் வீரட்டத் துக்குத் தேவாரப்பாடலே கிடையாது. கொறுக்கை வீரட்டத்துக்குச் சம்பந்தர் பாட வில்லை. சம்பந்தர் காலத்தைச் சேர்ந்த அப்பர் தேவாரத்தில் அடைவுதிருத்தாண்டகத்து இரண்டாம் செய்யுளில் ("காவிரியின் கரைக்கண்டி") அட்டவீரட்டத் தலங்களும் கூறப்பட்டுள்ளன. திருமூலர்காலத்தில் அட்டவீரட்டங்களுள் இரண்டுக்கு மட்டும் தலங் கள் குறிக்கப்பட்டும், தேவார காலத்தில் எட்டு வீரட்டங்கட்கும் தலங்கள் குறிக்கப் பட்டும் உள்ளன. இவ்வாறு கொள்ளின் திருமூலர் சம்பந்தர் காலத்துக்கு (கி. பி. ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதிக்கு) முந்தியவர் என்பது பெறப்படும். திருமூலர்

எட்டு வீரட்டங்கட்கும் திருமந்திரத்தில் தலங்குறிக்கவேண்டிய அவசியமில்லையென்று சொள்ளின் இவ்வித ஆராய்ச்சிக்கு இடமில்லை. (6) திருத்தொண்டத் தொகையிலும், நம்பியாண்டார் நம்பிகள் திருத்தொண்டர் திருவந்தாதியிலும் சேக்கிழார் திருத்தொண்டர் புராணத்திலும் திருமூலரும் அவர் வரலாறும் கூறப்பெறுதலால் திருமூலர் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டுக்கு முந்தியவரென்பதில் ஐயமில்லை. (7) திருமந்திரத்து 204-ம் செய்யுளின் இரண்டாம் அடி (கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த) யாப்பருங்கல விருத்தியில் குறிக்கப்பட் டிருத்தலும்இம்முடிபை வலியுறுத்தும். (8) திருவாசகத்துக்கும் திருமந்திரத்துக்கும் பலவகையான சொல், சொற்றொடர், கருத்து ஒற்றுமைகள் காணப்படுதலால் இவ்விரண்டு நூல்கட்கும் ஒரு தொடர்பிருத்தல் வேண்டும். மாணிக்கவாசகர் கி. பி. மூன்றாம் நூற்றாண்டின ரென்ற மரபின்படி திருமூலர் கி. பி. மூன்றாம் நூற்றாண்டின் பிற்பட்டவராதல் வேண்டும். மாணிக்கவாசகரை கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டினராகக் கொள்வோர் திருமூலரை அவருக்கு முந்தியவராகக் கொள்ளவேண்டும். திருமந்திரத்து 2651-ம் செய்யுளிற் கூறப்படும் பெருந்துறை, திருப்பெருந்துறை, திருவாவடுதுறை, பொதுவாகக் கடவுள் அருட்டுறை என்பவற்றில் ஒன்றைக் குறிக்கவேண்டும். இச்சொல்லிலிருந்து மட்டும் திருமூலர் மாணிக்கவாசகருக்குப் பிற்பட்டவ ரென்று திடமாகக் கூறவியலாது. (9) திருஞானசம்பந்தர் திருவாவடுதுறைக்குச் சென்ற காலத்துப் பலிபீடத்தி னருகில் மணங் கமழ்ந்த தென்றும் அகழ்ந்து பார்த்தபோது திருமந்திரநூற் பிரதி கிடைத்ததென்றும் ஒரு வரலாறு கர்ண பரம்பரையாக வுள்ளதெனச் சில தேவாரப் பிரதிகளிற் குறிக்கப் பட்டுளது. இவ்வரலாறு உண்மையாயின் திருமூலர் திருஞான சம்பந்தர் காலத்துக்கு (கி. பி. 600 - 650) முந்தியவராவார். ஆனல் இவ்வரலாறு பெரியபுராணத்திலாவது திருவாவடுதுறைப் புராணத்திலாவது கூறப்படவில்லை. மேலும் திருமந்திரம் வெளிப்பட்ட முறை திருவாவடுதுறைப் புராணத்தில் மேலே கண்டபடி வேறுவிதமாகக் கூறப் பட்டுளது. மேற்கூறிய பொருள்களையெல்லாம் ஒப்புநோக்கி முடிவு கூறின் பொதுவாகத் திருமூலர் காலம் கி. மு. 150-க்குப் பின் கி. பி. 900-க்கு முன் என்ற காலமாகும். பெரும்பாலும் கி. பி. மூன்றாம் நூற்றாண்டுக்குப் பின்னும் கி. பி. ஏழாம் நூற்றாண்டுக்கு முன்னும்இருந்த காலவளவையா யிருத்தல் கூடும். திருமூலர் திருஞான சம்பந்தருக்கு முந்தியவரென்றே உயர்திருவாளர்கள் - மறைமலை யடிகள், கா. சுப்பிரமணிய பிள்ளை, டாக்டர் - வை. வே. இரமண சாஸ்திரிகள் முதலியோர் கருதுகின்றனர்.

**திருமந்திரம் தமிழ்முதல் நூலா, மொழிபெயர்ப்பா?**:—டாக்டர். வை. வே. இரமண சாஸ்திரிகள் திருமந்திரம் மொழிபெயர்ப்பென்றும் திருமூலர் கயிலையிலிருந்து "ஸ்ரீமந்த்ர மாலிகா" என்றொரு வடமொழி நூலைக் கொண்டுவந்து தமிழில் மொழி பெயர்த்தா ரென்றும் கூறுகின்றார். பெரியபுராணத்திலும் திருவாவடுதுறைப் புராணத்திலும் இவ்வரலாறு கூறப்படவில்லை. மேலும் மொழிபெயர்ப்புக்கு மூவாயிரம் ஆண்டு தேவையில்லை, ஆண்டுக்கொரு பாடல் சொல்லவும் தேவையில்லை, வடமொழியில் இப்போது "ஸ்ரீமந்த்ர மாலிகா" என்றொரு நூல் இருப்பதாகவும் எப்போதாவது இருந்ததாகவும் தெரியவில்லை, எனவே திருமந்திரம் தமிழ்முதல் நூலே மொழிபெயர்ப் பல்லவென்று திடமாய்க் கூறலாம். வடமொழியிலுள்ள ஆகமப் பொருள்களைத் தமிழில் கூறுவதாகத் திருமூலர் 81-ம் பாட்டில் சொல்வதிலிருந்து திருமந்திரம் மொழிபெயர்ப் பென்று ஏற்படாது. ஆகமப் பொருளை நன்றாக மனதிற் பதித்து தமது மொழியிலே திருமந்திரமாகச் செய்தார் என்பதே போதரும்.

**திருமந்திரப் பாடற்றொகை**:—திருமந்திரம் 99, 100, 101, 3046-ம் பாக்களிலிருந் தும் பெரியபுராணத்திலிருந்தும் திருமந்திர மாலை மூவாயிரம் பாடல்களையுடையதென அறிகிறோம். இப்போதுள்ளவை காப்புச் செய்யுளோடு சேர்ந்து 3048. வேறு நூல் களில் திருமந்திரச் செய்யுள்களென மேற்கோளாகக் காட்டப்பட்டு இப்போது கிடைக்

கும் திருமந்திரப் பிரதிகளில் சேர்க்கப்படாதவை 11. இதுவரை அச்சில் வெளிவராமல் சில ஏட்டுப் பிரதிகளிலும் நமது பதிப்பிலும் வெளிவந்துள்ள பாடல்கள் 17. எனவே மூவாயிரத்துக்கு அதிகமாகவுள்ள இப்பாடல்களைப் பற்றி ஆராயவேண்டும். சேக்கிழார் திருமூலரைப்பற்றிக் கூறுங்கால் ஆண்டுக் கொன்றாக மூவாயிரம் ஆண்டு இப்புவிமே லிருந்து மூவாயிரம் மந்திரம்செப்பிக் கயிலைகண்ணி ஒருகாலும் பிரியாமைத்தாளடைந்த தாகமட்டும் கூறுகின்றாரே தவிர, திருமூலர் தந்திரப் பகுப்பு, அதிகாரப் பகுப்பு முதலியன செய்ததாகக் கூறவில்லை. திருமூலரே அவற்றைச் செய்திருப்பின் சேக்கிழார் கூறாமல் விடார். எனவே திருமூலர் சீடர்களும் அவர்கள் வழிமுறை வந்தோரும் இப்பணியைச் செய்திருத்தல் வேண்டும். நமக்குக் கிடைத்த பிரதிகளிற்கூட தந்திரப் பகுப்பில்லை. அவ்வாறு பாகுபாடு செய்தவர்கள் சில பாடல்களை இரண்டு அதிகாரங் கட்குப் பொருத்தமென் றெண்ணி இரண்டதிகாரங்களில் வைத்திருத்தல் கூடும். நமது பதிப்பில் அவ்வவ் விடங்களிற் குறித்துள்ளபடி இப்போதுள்ள பிரதிகளில் பாடல்கள் அதிகாரங்களில் பலவகையான மாறுபட்ட முறையில் வைக்கப்பட்டுள்ளன. சில பாடல் கள் இருமுறை மும்முறை வருவதால் மூவாயிரத்துக்குமேல் மொத்த எண்ணிக்கையில் 58 அதிகம் ஏற்படுகிறது. இதில் முக்காற்பங்குக்குமேல் சொல் வேறுபாடின்றி பாடல் கள் அப்படியே மற்றொருமுறை இருமுறை வந்துள்ளன. காற்பங்கு பாடல்கள் இரண் டொரு சொல் வேறுபாட்டோடாவது அல்லது அடிகள் முன்பின்னாகவாவது வந்துள் ளன. சில பாடல்கள் திருமூலர் வாக்கல்லவென்று ஐயுறக் கூடிய நிலையிலுள்ளன. அத் தகையன 99, 100, 101 102, 3046-ம் பாடல்களாகிய ஐந்து. இவைகள் திருமூல ரைப் படர்க்கையில் வைத்துக் கூறுதல் முதலிய பல காரணங்களால் திருமூலர் வாக்கல்லவென்று ஐயுறவேண்டிய நிலையிலிருக்கின்றன. திருமூலர் "ஒன்றவன்றானென வெடுத்தார்" என்று சேக்கிழார் கூறுவதால் காப்புச் செய்யுளும், எல்லா அச்சுப் பிரதிகளிலும் முதற் செய்யுளாக வந்துள்ள "போற்றிசைத்தின்னுயிர்" என்ற 2-ம் செய்யுளும் திருமூலர் வாக்கல்லவென்று ஐயுறவேண்டி யிருக்கிறது. தந்திரப் பகுப்பு, அதிகாரப்பகுப்பு செய்தவர்கள் காப்புச்செய்யுளையும் சிவபெருமான் துதியொன்றையும் சேர்த்திருத்தல்கூடும். எனவே மேற்கூறிய ஐந்தும் இவ்விரண்டும் சேர்ந்து ஏழுபாடல் களும், அதிகமாக இருமுறை மும்முறை வந்துள்ள வகையில் 58 பாடல்களும் ஆக மொத்தம் அறுபத்தைந்து பாடல்கள் அதிகமாக வந்துள்ளனவென்று ஊகிக்கலாம். இவைகளைக் கழித்தால் மொத்த தொகை மூவாயிரத்துக்கும் குறைகிறது. நமது பதிப்பில் புதியனவாக வந்துள்ள பாடல்களிற் சிலவும், வேறு நூல்களில் மேற்கோள் களாகக் காட்டப்பட்ட சிலவும் சேர்ந்தால் மொத்த தொகை 3000 ஆகும். இவ்விரண்டு கூறினுள் எவ்வெப்பாடல்கள் திருமூலர் வாக்கென்று உறுதியாகக் கூறவியலாது. எனவே திருமந்திரத்தில் அதிகமாக இடைச் செருகல்கள் உள்ளனவென்று கருத வேண்டியதில்லை. டாக்டர் வை. வே. இரமணசாஸ்திரிகள் காப்புச் செய்யுள், 2, 59 - 102, 3046, 3047 ஆகிய 48 பாடல்கள் திருமூலர் வாக்கல்லவென்று ஒதுக்குகிறார்கள். இவ்வளவு அதிகமாக ஒதுக்கவேண்டியது அவசியமில்லையென்று மேற் கூறியவாற்றால் விளங்கும். இருமுறை மும்முறை வந்துள்ள பாடல்களின் எண் அட்டவணையும், பிரதிகளிலில்லாத பாடல்களின் எண் அட்டவணையும், நமது பதிப்பில் புதியனவாக வந்துள்ள பாடல்களின் அட்டவணையும், கீழே கொடுக்கப்பட்டுள்ளன. அவைகளை ஒப்பிட்டால் மேற்கூறிய கணக்கின் விவரம் நன்கு புலப்படும்.

**மூவாயிரந் தமிழ், மூந்நூறு மந்திரம், முப்பதுபதேசம் :**—இவ்வாறு 3046-ம் செய் யுள் கூறுகின்றது. இச்செய்யுளைத் திருமூலர் வாக்கென்று கொண்டு திரு. விசுவநாத பிள்ளையவர்கள் பதிப்பில் நான்காந் தந்திரத்தில் திருவம்பலச்சக்கரம் 89, வயிரவி மந்திரம் 50, ஏரொளிச்சக்கரம் 36, வயிரவச்சக்கரம் 6, சாம்பவி மண்டலசக்கரம் 10. புவாபதிச்சக்கரம், 12, நவாக்கரிசக்கரம் 100 ஆ 303 பாடல்கள்தான் மூந்நூறுமந்

திரம் என்றும், முதல் தந்திரத்தில் உபதேசம் என்ற அதிகாரத்தில் கூறப்பட்ட 30 பாடல்கள்தான் 30 உபதேசம் என்றும் வெளியிடப்பட்டுள்ளன. இம்முடிபுகட்குப் போதிய ஆதாரங்களில்லை. சிலர் திருமூலர் மூவாயிரம் திருமந்திரம் இயற்றியதுபோல் முந்நூறு மந்திரங்களும் முப்பது உபதேசங்களும் அடங்கிய வேறு நூல்களையும் இயற்றினர் என்று கூறுகின்றனர். இதற்கும் ஆதாரமில்லை, அத்தகைய வேறு நூல்களும் கிடைக்கவில்லை, சேக்கிழாரும் திருமூலர் வேறு நூல்களியற்றியதாகக் கூறவில்லை. திருமூலர் பெயரால் வழங்கும் சில வைத்திய நூல்களை அவர் இயற்றினரென்பதற்குப் போதிய சான்றுகளில்லை. பொதுவாக நோக்குமிடத்து மூவாயிரம் திருமந்திரப் பாடல்களுள் மிக முக்கியமானவை முந்நூறு என்றும் அவற்றுள் முப்பது செம்பொருள்கள் கூறப்பட்டுள்ளன வென்றும் கூறலாமே யொழிய வேறெதுவும் துணிந்து கூறவியலாது. இந்நூலில் நாலாந்தந்திரத்திற் பல பொருள்கள் மிக முக்கியமாகவும் பெரும்பகுதி அந்தாதித் தொடையிலும் கூறப்பட்டுள்ளபடியால் அப்பொருள்கள் மறவாது நினைவு கூர்ந்து நாடோறும் ஓதற்குரிய தன்மையில் வைக்கப்பட்டுள்ளனவென்று ஒருவாறு ஊகிக்கலாம்.

**திருமந்திரத்திற் கூறப்படும் பொருள் :**—இது,

“தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவா சகமும் **திருமூலர் சொல்லும்**
ஒருவாசகம் என்றுணர் ”

என்ற செய்யுளால் விளங்கும். சைவசித்தாந்தச் செம்பொருள்களையும் யோகப் பயிற்சி நுட்பங்களையும் இந்நூல் கூறுகின்றதெனப் பொதுவாகக் கூறலாம்.



# சுந்தரர் தேவாரம் கால வரிசை

[தி. கி. நாராயணசாமி]

**விளக்கக் குறிப்பு :**—ஈண்டு காட்டியுள்ளன பதிக முதற் குறிப்புகள். இக் குறிப்பின் முன்னுள்ள எண் அந்தந்தப் பதிகத்தை வரிசைப்படுத்த ஆதரவாயிருக்கும் புராணச் செய்யுளின் தொடர் எண்; பின்னுள்ள எண் பண் முறையில் உள்ளபடி பதிகத்தின் தொடர் எண். ஈட்டிக் குறியிட்ட பதிகம் சேக்கிழாரால் தெளிவுபடக் குறிக்கப்படாது பதியை மட்டும் குறித்து பொதுப்பட தமிழ் பாடி, ஏத்தி, தமிழ் மாலை சாத்தி என்பன போன்ற குறிப்பால் தெளிந்து, குறித்துள்ள இடத்தில் என்னால் வகுக்கப் பட்டது. இவற்றில் குற்றங்கள் நிகழ்ந்துளவேல் அன்பர்கள் எனக்கு அறிவித்து ஊக்குமாறு வேண்டுகிறேன். இந்த முறையில் தெளியக்கூடிய கருத்துகள் உளவெனினும் தனிப் பதிகங்களாக ஏழு பாடல்கள் தனித்திருப்பதை பொருத்த வழியுளவெனினும் தெரிக்க.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்

(காலவரிசை—சேக்கிழார் முறை)

### தடுத்தாட்கொண்ட புராணம்

| | | |
|---|---|---|
| 74 | பித்தா | 1 |
| 79 | மலையாருவி | 13 |
| 88 | தம்மானை | 38 |
| †91 | நீறுதாங்கிய | 64 |
| 113 | சாதலும் | 58 |
| 123 | கரையுங் | 73 |
| 199 | தில்லைவாழ் | 39 |

### ஏயர்கோன்

| | | |
|---|---|---|
| 20 | நீளநினைந்து | 20 |
| 41 | பூணணொன் | 15 |
| 43 | ஊனங்கத்து | 67 |
| 51 | தம்மையே | 34 |
| 53 | மாடமாளிகை | 87 |
| 56 | தண்ணியல் | 98 |
| 59 | நம்பினார் | 88 |
| 60 | பொருவனார் | 76 |
| †61 | நீரும்மலரும் | 93 |
| 62 | மலைக்குமகள் | 9 |
| 63 | மறையவன் | 66 |
| †65 | கழுதை | 60 |
| 66 | பிறையணி | 99 |
| 67 | குரும்பை | 16 |
| 70 | அழனீர் | 94 |
| 73 | பொன்னார் | 24 |
| 76 | மறைகளாயின | 75 |
| 80 | வைத்தனன் | 14 |
| 84 | காருலாவிய | 36 |
| 87 | மற்றுப்பற்று | 48 |
| †92 | எறிக்குங்கதிர் | 42 |
| †93 | விடையாருங் | 27 |
| 96 | அங்கமோதி | 35 |
| 103 | வடிவுடைமழு | 85 |
| 105 | நஞ்சியிடை | 43 |
| 115 | மடித்தாடு | 90 |
| 117 | சிம்மாந்து | 30 |
| 118 | முன்னவன் | 22 |
| 118 | தலைக்கலன் | 57 |
| 120 | வன்வாய் | 40 |
| .121 | மத்தயானை | 7 |
| 132 | பொன்செய்த | 25 |
| 141 | பாறுதாங்கிய | 33 |
| †145 | செம்பொன் | 68 |
| 145 | மருவார் | 53 |
| 146 | பொடியார் | 28 |
| 147 | எனக்கினி | 72 |
| †148 | படங்கொள் | 6 |
| †149 | ஆதியனாதிரை | 97 |
| 150 | திருவும்வண்மை | 65 |
| †152 | ஊர்வதோர் | 56 |
| 154 | புற்றில்வாளர | 62 |
| 163 | இத்தனையா | 29 |
| †166 | செடியேன் | 23 |
| 170 | கோவலனான் | 17 |
| †173 | கொன்றுசெய்த | 81 |
| 182 | முதுவாயோரி | 41 |
| 190 | நொந்தா | 21 |
| 191 | நெய்யும் | 5 |
| 192 | தேனெய் | 10 |
| 194 | விடையின் | 86 |
| 197 | செண்டாடும் | 26 |
| †198 | மாறும்மரை | 79 |
| †198 | வாழ்வாவது | 78 |
| 204 | பாட்டும்படி | 91 |
| 273 | பத்திமையுமடி | 51 |
| 276 | அழுக்குமெய் | 54 |
| 277 | திருவுமெய் | 69 |
| 280 | பிழையுள்ளன | 89 |
| 283 | முத்தாமுத்தி | 52 |
| 288 | ஆலந்தான் | 61 |
| 291 | அந்தியுநண் | 83 |
| †293 | காண்டனன் | 45 |
| 294 | கல்வாயகில் | 3 |
| 296 | கங்கைவார் | 70 |
| 300 | மின்னுமாமேக | 74 |
| 303 | தூவாயா | 96 |
| 305 | குருகுபாய | 37 |
| 309 | மீளாவடிமை | 95 |
| 406 | அந்தணாளன் | 55 |

### கழறிற்றறிவார்

| | | |
|---|---|---|
| 63 | பத்தூர் | 46 |
| 87 | யாழைப்பழி | 71 |

# திருஞானசம்பந்தர் பதிக அமைப்பு

(மலர் 6, இதழ் 9, 212-ம் பக்கத் தொடர்ச்சி)

[E. N. தணிகாசல முதலியார், பி. ஏ., பி. எல்.]

## 6. திருஞானசம்பந்தர் பதிகத்தின் முதற் பாகத்தின் சிறப்பிலக்கணம்

திருஞானசம்சந்தர் பதிகத்தின் இரண்டாம் பாகமாகிய 8, 9, 10, ஆகிய முச்செய்யுட்களின் விஷயம் பதிகத்திற்கேற்றவாறு வெவ்வேறு முகங்களில் விளங்குவதுபோல் முதற் பாகமாகிய 7 பாசுரங்களும் பற்பல ஒழுங்கில் அவர் பதிகங்களில் காணப்படுகின்றன. வெளிப்படையில் இவ்வகை ஒழுங்குகள் முதற் பாகத்தில் உள்ளவை இரண்டாம் பாகத்தில் எவ்வாறு கலைத் திறமையோடு கலக்கின்றன என்பதை சற்று ஆராய்வோமாக. முதற் பாகமான ஏழு பாசுரங்களின் அடிப்படையாய் எடுக்கப்பட்டனவும், இரண்டாம் பாகமாகிய 8, 9, 10, செய்யுட்களின் தத்துவ அடிப்படையாய் எடுக்கப்பட்டனவும் எத்தகைய விழுமிய பொருள்கள் என்பதும் அவ்வடிப்படைப் பொருள்களுக்கும் தருக்க ஒழுங்காய் சம்பந்தம் உண்டோ என்பதும் சற்று கவனிப்போம்.

சிறப்பாகச் சைவசமயத்தில் காட்டப்பட்ட பொருள்கள் ஏழென்பர். அவற்றைப் பின்வரும் அப்பர் பாசுரங்களால் உணரலாம்,

" ஏழுமாமலை யேழ்பொழில் சூழ்கடல்
ஏழுபோற்று மிராவணன் கைந்நரம்
பேழ கேட்டருள் செய்தவன் பொற்கழல்
ஏழுஞ் சூழடி யேன்மனத் துள்ளவே "

—விஷந்தீர்த்த திருப்பதிகம் 7.

" ஏழுகொ லாமவ ரூழி படைத்தன
ஏழுகொ லாமவர் கண்ட விருங்கடல்
ஏழுகொ லாமவ ராளு முலகங்கள்
ஏழுகொ லாமிசை யாக்கின தாமே "

—அப்பர் தனித் திருக்குறுந்தொகை.

இவ்விரண்டு பாசுரங்களிலும் எழுகடலும், எழு நரம்பிசையும் இரு முறை வருவதால் அவற்றை இருமுறை கூட்டாது சிறப்பானவை எழு வகைப் பொருள்களும் மேற்கண்ட பாசுரங்களில் கூறப்பட்டனவாகும். பசுக்கள் மூழ்கி உலகவியலில் துன்புறுவதற்குக் காரணமான மலங்கள் மூன்று. அவை யாவன :—ஆணவம், காமியம், மாயை என்பன. இவற்றின் உருவகங்கள் முறையே இராவணனும்; அரி - அயனும்; அமணருமாம். இராவணன் ஆணவச் செய்கையால் சிவபெருமான் இருப்பிடம் என்பதும் எண்ணாது கயிலையைப் பேர்த்தெடுக்கத் துணிந்தனன். அரி - அயனே காமிய உருவகமாம். தமது சக்தி சிவத்தின் முன்னர் என்னும் என்று எண்ணாது தம் இருவருள் சிறந்தோர் எவர் என்பதைப்பற்றிச் சண்டையிட்டனர். பின்னர் தழலாய் நின்ற தாணுவை அடிமுடி காண்போம் என பந்தயம் வகுத்தனர். இவருள் காமியத்தில் குறைந்த மாலோ சிவபெருமான் திருவடி காணாது திரும்பி தன் ஆற்றல் குறைந்ததை ஒப்புக்கொண்டனர். அயனோ அவ்வாறு செய்யாது பொய்யால். பந்தயம் வெல்லப் புகுந்தது காமியத்தின் முதிர்ச்சியாகும். மாயையோ பொருளல்லவற்றை பொருளென்று மாந்தரை உணரச் செய்வது. அமணர் மொழி அவ்வாறென்று பன்முகங்களில் பத்தாம் பாசுரங்களில் புகலி வேந்தர் விளக்குகின்றார். எனவே ஆணவம், காமியம், மாயை என்னும் மூவகைப் பொருள்களோடு முற்கூறிய எழுவகை விழுமிய பொருள்கள் பொருந்த வைப்பது பதிகத்தில் அந்தம் கொடாததலால் இம்மும்மலங்களை ஒழிப்பதற்கு ஏதுவான பொருள்களும் சிவபெருமான் திருவிளையாடல்களும் இம் மூன்றின் மூலமாய்க் குறிப்பிட்ட சில அம்சங்களை எட்டு, ஒன்பது, பத்து ஆகிய பாசுரங்களில் திருஞானசம்பந்தர் கலைஞான ஒளி விளங்கப் பின்னிப் பாடுவாராயினர். சைவசமயத்தில் சிறப்புடன் காட்டப்படும் மூன்று பொருள்கள் எழுவகையாம். அவற்றைப் பின்வரும் அப்பர் பாசுரங்களால் அநுமானிக்கலாம் :—

“ மூன்று மூர்த்தியுள் நின்றிய லுந்தொழில்
மூன்று மாயின மூவிலைச் சூலத்தன்,
மூன்று கண்ணினன் தீத்தொழில் மூன்றினன்
மூன்று போதும்என் சிந்தையுள் மூழ்குமே ”

—தனித் திருக்குறுந்தொகை 3.

“ மூன்றுகொ லாம்அவர் கண்ணுத லாவன
மூன்றுகொ லாம்அவர் சூலத்தின் மெய்யிலை
மூன்றுகோ லாங்கணை கையது வின்னாண்
மூன்றுகோ லாம்புர மெய்தன தாமே ”

—அப்பர் - விடந்தீர்த்த திருப்பதிகம் 3.

ஆக முதற் பாகத்தின் எழுவகை விழுமிய பொருள்களுடன் இரண்டாம் பாகத்தில் மற்றும் வேறுவித எழுவகை விழுமிய பொருள்கள் அமைக்கக்கூடியதாய் அவற்றிற்குத் தக்க திருக்கடைக் காப்பு மூன்றும் பாகமாய் ஒவ்வொரு பதிகமும் உருவம் பெற்று இயங்குவது ஆளுடைய பிள்ளையார்

பதிக இலக்கணமாய் நிற்கின்றது. எனவே, சம்பந்தர் பதிகம் எழுவகை ஏழும், எழுவகை மூன்றுமா யுள்ளனவற்றில் ஒவ்வொரு பதிகத்திலும் ஒவ்வொன்றெடுத்துப் பிணிக்கப்பட்டுத் திருக்கடைக்காப்பால் முடிக்கப்படுவதால் குறைந்தது நாற்பத்தொன்பது வகை ஒழுங்குகள் முதல் மூன்று திருமுறைகளிலும் காணலாம். அவற்றுள் சிலவற்றை அருட்கவியான தாயுமானவர் பின் வரும் பாசுரத்தில் குறிப்பிடுவது காண்க.

"ஒன்றிரண்டாய் விவகரிக்கும் விவகாரங்
கடந்தேழாம் யோக பூமி
நின்று தெளிந்தவர் பேசாமௌன நியாயத்தை
நிறைநிறை வைத் தன்னை
அன்றியொரு பொருளிலதாய் எப்பொருட்கும்
தான்முதலாய் அசலமாகி
என்றுமுள்ள இன்பத்தைத் தண்ணென்ற
சாந்தபத வியற்கை தன்னை"

ஏழு யோக பூமிகளாவன: முத்தியில் விருப்பம், நற்கேள்வி, சத்தில் மனநாட்டம், சத்துற்பத்தி, சித்தி வெறுப்பு, பரநாட்டமின்மை, விழியா நிலை என்பனவாம். இவற்றை அடையவொட்டாமற் செய்வன மும்மலங்கள். இவ்வேழு யோக பூமிகளை முறையே அடைந்து மும்மலங்களைக் கடிந்தவன்,

"பதமூன்றுங் கடந்தவர்க்கு மேலான
ஞானபத பரிசு காட்டி
சதமாகி நிராலம்ப சாக்ஷியதாய்
ஆரம்பத் தன்மை யாகி
விதம்யாவுங் கடந்த வித்தையெனு
மிருளைக் கீண்டெழுந்து விமலமாகி
மதமாறுங் காணாத ஆனந்த
சாகரத்தை மௌன வாழ்வை"
—தாயுமானவர்.

அடையலாம் என்று விளக்கும் திருக்கடைக்காப்புச் செய்தனர். எழுவகை யோகபூமிகளென்று தொகுத்துச் சுட்டப்பட்டன பல்வகை முகங்களில் திருஞான சம்பந்தர் தேவாரத்தில் வகுத்துக் காட்டப்பட்டன. அவற்றைப் புகலி வேந்தர் பாசுரங்களால் ஆராய்வோமாக.

## ஐந்தெழுத்து

[அ. மு. பரமசிவானந்தம்]

"சிவாய நமவென்று சிந்தித்திருப் போர்க்கு
அபாயம் ஒருநாளு மில்லை—உபாயம்
இதுவே மதியாகும் இல்லாத வெல்லாம்
விதியே மதியாய் விடும்"

என்ற ஔவையின் செம்மை சான்ற மொழிகள் ஐந்தெழுத்துண்மையை அனைவருமறியப் புலப்படுத்தும். இவ்வைந்தெழுத்து ஆற்றலை அங்கயற்கண்

ணியை அருகமைத்த ஆண்டவரது அடியார்கள் அதிகமாகப் புகழ்ந்து பாடியுள்ளார்கள்.

பூக்களில் பொலிவுள்ளதும், புகழப்பட்டதுமாகிய தாமரை எத்தன்மையாற் சிறந்துள்ளதோ, அஃதேபோன்று நாவினுக்கு அருமையான கலமாயிருப்பது இந் 'நமசிவாய' என்பதாகும். இவ்வைந்தெழுத்து 'இல்லக விளக்கது, இருள் கெடுப்பது, சொல்லக விளக்கது, சோதியுள்ளது, பல்லக விளக்கது, பலருங் காண்பது, நல்லக விளக்கது'. மேலும் இப்பஞ்சாக்கரமானது பல்வேறு பாவங்களிழைத்துப் பாழ்நரகிற் படும் ஒரு பாபியையும் பரமனிடம் சேர்ப்பிக்கும் பண்புடையது.

இனி, இவ்வைந் தெழுத்தே பிரபஞ்ச உற்பத்திக்குக் காரணம் என்பதைத் திருமூலர் தம் திருமந்திரத்தில் தெற்றெனத் தெரிவித்துள்ளார். அன்னார்,

" அஞ்செழுத் தாலைந் து பூதம் படைத்தன
னஞ்செழுத் தாற்பல யோனி படைத்தன
னஞ்செழுத் தாலிவ் வகலிடந் தாங்கின
னஞ்செழுத் தாலே அமர்ந்து நின்றானே "

என்றும்,

" ஐம்ப தெழுத்தே அனைத்து வேதங்களும்
ஐம்ப தெழுத்தே அனைத்தாக மங்களும்
ஐம்ப தெழுத்தேயு மாவத றிந்தபின்
ஐம்ப தெழுத்தும் போய்அஞ் செழுத்தாமே "

என்றும் கூறி பஞ்சாக்கரங்களே பிரபஞ்சமாய் விரிந்தன என்பதையும், ஐம்பதெழுத்தும் இவ்வைந்தெழுத்துள்ளே பயனுடையவாம் என்றும் கூறி அதன் விரிவையும் விரித்துள்ளார். இவர் இவ்வாறு நல்லோரும், வல்லோரும், எல்லோரும், அல்லோரும் அறிந்துகொள்ளும்படி விரித்துரைத்தது விரும்பற்பாலது.

இவ்வைந்தெழுத்தாவன ஆர்கலியுலகத்துத் தோன்றிய மக்கட்கெல்லாம் அருமை சான்ற மொழியாகி ஓதுவார்களை யெல்லாம் உயர் நிலைக்குக் கொணர்ந்து, ஆணவம், காமியம், மாயை என்ற மும்மலங்களை வேரறுத்து வேதத் தலைவனது அடிகளைச் சாரச்செய்வன. நரகம் முதலிய நடுங்கத்தக்க இன்னல் வந்தெய்திய போதினும் அவ்வின்னல்கள் இரிந்தோடச் செய்வதும் இவ்வைந்தெழுத்தே யாகும். இவை ஓதும் ஆன்றோரிடத்து இயமனுடைய தூதர்களும் நெருங்க அஞ்சுவர். இவைகளை நம் ஆளுடைய பிள்ளையார்,

' தும்மல் இருமல் தொடர்ந்த போதினும்
வெம்மை நரகம் விளைந்த போதினும்
இம்மை வினையடர்த் தெய்தும் போதினும்
அம்மையினுந் துணை யஞ் செழுத்துமே '

என்றும்,

' நரகமேழ்புக நாடின ராயினும்
உரை செய்வாயின ராயின் உருத்திரர்

விரைவியே புகுவித்திடு மென்பரால்
வாதன்நாமம் நமச்சிய வாயவே'

என்றும்,

'கொல்வாரேனும் குணம்பல நன்மைகள்
இல்லாரேனும் இயம்பு வராயிடில்
எல்லாத் தீங்கையும் நீங்குவ ரென்பரால்
நல்லார் நாமம் நமச்சிவாயவே'

என்றும் பல படப்புகழ்ந்துள்ளனர்.

மகேந்திரனல் அளவிலா இன்னலுற்றுக் கடையே கல்லில் கட்டிக் கடலில் போடப்பட்டபோதினும் அந்தக் கல்லேயே புணையாகக் கொண்டு பாதிரிப்புலியூரின் கரைசேரப் பயனுதவியது இப்பஞ்சாக்கரமே யாகும். இதையன்றோ அப்பரும்,

"சொற்றுணே வேதியன் சோதி வானவன்
பொற்றுணேத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணே பூட்டியோர் கடலில் பாய்ச்சினும்
நற்றுணே யாவது நமச்சி வாயவே"

என்ருர்.

இத்தகைய எழிலுடைய ஐந்தெழுத்தினதுண்மையை அவனியில் அறியாதார் யாருளர்? இதை ஓதுவார் உம்பரினுமிக்கும், இமையாமுக்கண் இறைவனதடிகளே அமையாக் காதலோடு ஆதரங்கொண்டு பேரின்பப் பெருவாழ் வெய்தி இரண்டறக் கலப்பர். அன்னருடைய இதய கமலத்தே அருளுருவாய்த் திகழுவன். இதைத் திருமூலர்,

"நகார மகாரஞ் சிகார நடுவாய்
வகார மிரண்டும் வளியுடன் கூட்டி
யொகார முதற் கொண்டொருகா லுரைக்க
மகார முதல்வன் மனத்தகத் தானே"

என்று இனிய மொழிகளால் இயம்பிப் போனர். எனவே, இரண்டறக் கலக்கும் இன்பம் வேண்டுமாயின், பிறவாதிருக்கும் பேறு வேண்டுமாயின், முத்தி யுலகத்தை முன்னவேண்டுமாயின், இம்மைப் புகழ் எய்தவேண்டு மாயின், நிற்கும்பொழுதும், கிடக்கும்பொழுதும், இருக்கும்பொழுதும் உன்னினல் உவகை பயக்கும் ஐந்தெழுத்தை ஓதுவதே உயர் நெறியாகும். அதுவே நமக்கு உண்மை அணிகலம்.

"துஞ்சலுந் துஞ்சலிலாத பொழுதினும்
நெஞ்சகம் நைந்து நினேமின் நாடொறும்
வஞ்சகம் மற்றடி வாழ்த்த வந்தகூற்று
அஞ்ச உதைத்தன அஞ்செழுத்துமே" —காழிப் பிள்ளேயார்.



# அப்பரது கடவுட் கொள்கை

[பெ. கோவிந்த மூப்பனார், கொடுமுடி.]

(மலர் கூ, இதழ் க0, 240-ம் பக்கத் தொடர்ச்சி)

" ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய் "

" முத்தமிழும் நான்மறையும் ஆனான் கண்டாய் "

" வடமொழியும் தென்தமிழும் மறைகள் நான்கும் ஆனவன்காண் "

" ஆரியந் தமிழோ டிசையானவன் "

என்று அடிகள் கூறுதலை நோக்குக.

திருநாவுக்கரசு நாயனார் ஆரியர் கொள்கையையும் ஏற்றவராதலால் இறைவனுக்கு மனைவி மக்கள் உண்டு என்றும், வடிவம் படை உடைமுதலியன வுண்டு என்றும் கூறுவர். கூறுவாராயினும் இறைவனுக்கு மனைவி மக்களும் வடிவம் படை உடை முதலியனவும் உண்மையில் இல்லை என்று விலக்கி, நுணுக்கமாகத் தமிழர்கள் கொள்கையைத் தழுவிச் சிவபெருமானுக்கு மனைவி மக்கள் இல்லை என்றும் வடிவமுதலியன இல்லை என்றும் அச்சிவபெருமான் வடிவத்தையும், பிறவியையும் காலத்தையும், காட்சியையும் கடந்த பொருள் என்றும் கூறுவர்.

" மைப் படிந்த கண்ணாளும் தானும் கச்சி
மயானத்தான் வார்சடையான் என்னினல்லான்
ஒப்புடைய னல்லன் ஒருவனல்லன்
ஒரூர னல்லன் ஒருவமனில்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும்
அவனருளே கண்ணாகக் காணினல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்
இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணாதே "

" பெருநிலம் நீர்தீவளி ஆகாசமாகி
அண்டத்துக் கப்பாலாய் இப்பாலானே "

" எரொளியை இருநிலனும் விசும்பும் விண்ணும்
எழுலகுங் கடந்தண்டத் தப்பால் நின்ற பேரொளியை "

" பிறவாதே தோன்றிய பெம்மான் தன்னை "

" நூறுகோடி பிரமர்கள் நொந்தினார்
ஆறுகோடி நாராயணர் அங்ஙனே
எறுகங்கை மணலெண்ணில் இந்திரர்
ஈறிலாதவன் ஈசன் ஒருவனே "

" பின்னானும் முன்னானும் ஆனான் தன்னை "

" புதியனவுமாய் மிகவும் பழையான் தன்னை "

" காண்டற்கரிய கடவுள் கண்டாய் "

என்று அடிகள் சிவபெருமானது சிறப்பியல்பை அருளிச் செய்தல் காண்க.

இறைவன் சிறியனவும் பெரியனவுமாகிய எல்லாப் பொருள்களையும் கடந்த பெரியவனுயினும் அவன் அப் பொருள்களினுள்ளும், அவற்றின்

